அத₂ பூர்வபக்ஷ:
ஶரணவசஸ: ஸாத₄நமிதி

ரஹஸ்யத்ரயஸாரத்திலே இருபத்துமூன்றுமதி₄காரத்திலே - ஸித்₃தே₄ாபாயத்தைப்பற்றி வரும் கலக்கங்களும், அவற்றின் பரிஹாரங்களும் சொல்லுகிறோம். 'அநாதி₃காலம் அநாத₃ரித்த ஈஶ்வரன் இன்று ஒருத்தனை ஆத₃ரிக்கிறது தன் ஸ்வாதந்த்ர்ய-மாத்ரத்தாலேயன்றோ? இங்ஙனன்றாகில், *இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான் அன்றென்னைப்-புறம் போகப்புணர்த்தது என்செய்வான்* என்று ஆழ்வார் விண்ணப்பம் செய்ய, ஸர்வேஶ்வரன் *சூழ்விசும்பணி முகில் தூரியம் முழக்கின* இதொழிய வேறொரு உத்தரம் அருளிச்செய்தானோ? ஆகையால் நாமொரு உபாயா-நுஷ்ட₂ாநம் பண்ணுகை என்னென்பது, *நடுவே வந்து உய்யக்கொள்கின்ற நாதனை* என்கிறபடியே *அருள் புரிந்த சிந்தையடியார்மேல் வைத்த*வன் தானே ரக்ஷித்தபோது காணுமத்தனையன்றோ' என்று சிலர் கலங்குவர்கள். இவர்களைத் தெளிவிக்கும்படி - ஈஶ்வரன் ஸ்வதந்த்ரனே-யாகிலும், வைஷம்யநைர்க்₄ருண்யமாகிற தோ₃ஷங்கள் தனக்குத்தட்டாமைக்காக இவன்பக்கலிலே ஒரு வ்யாஜத்தை-யுண்டாக்கி அத்தை அவலம்பி₃த்துத்தான் ரக்ஷிக்கும். இவ்வர்த்த₂த்தை, *திருமாலிருஞ்சோலைமலை யென்றேன் என்ன, திருமால்வந்து என் நெஞ்சுநிறையப்புகுந்தான்* என்று ஆழ்வார் அருளிச்செய்தார்... இப்படியானால், *இன்றென்னைப் பொருளாக்கி* என்கிற பாட்டுக்கும் இதுக்கும் மூலமான வசநங்களுக்கும் நிர்வாஹமே-தென்னில் - அது சொல்லுகிறோம் - ஈஶ்வரனுக்கு ஸஹஜங்களான ஸ்வாதந்த்ர்யகாருண்யங்களினுடைய ப்ராத₄ாந்யத்தாலே இவற்றுக்கு வ்யாஜபூ₄தங்களான விஶேஷ-காரணங்களை அநாத₃ரித்துப்பண்டென்னைப் பராங்முக₂னாக்கு-கைக்கும், இவற்றுக்கு வ்யாஜபூ₄தங்களான விஶேஷகாரணங்-களை ஆத₃ரித்து இன்றென்னை அபி₄முக₂னாக்குகைக்கும் உன் ஸ்வாதந்த்ர்யமும் க்ருபையுமொழிய வேறொரு ப்ரத₄ாந-காரணம் கண்டிலேன்.

எனக்குக் காட்டாதே ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை நீ கண்டதுண்டா-
கில் அருளிச்செய்யவேணுமென்ன, ஈஶ்வரன் நிருத்தரனு-
யிருக்கிறவிருப்பாலே ஸ்வாதந்த்ர்யக்ருபைகளினுடைய
ப்ராத4ாந்யத்தை நாட்டுக்கு வெளியிடுகிறார். இத்தால்
இச்சேதநனை லீலோபகரணமாக்குகைக்கு ப்ரத4ாநகாரணம்
ஈஶ்வரஸ்வாதந்த்ர்யம். இதுக்கு ஸஹகாரிகாரணம் ப்ரவா-
ஹாநாதி3யான ஸ்வாஜ்ஞாதிலங்க4நம். இவனை போ4கோ3ப-
கரணமாக்குகைக்கு ப்ரத4ாநகாரணம் ஈஶ்வரனுடைய
ஸ்வாப4ாவிககாருண்யம். இதுக்கு ப்ரதிப3ந்த4கமான ஈஶ்வர-
நிக்3ரஹத்தை ஶமிப்பித்துக்கொண்டு ஸஹகாரிகாரண-
மென்று பேர் பெற்றது - இவனுடைய ஸுக்ருதவிஶே-
த்3வாரகக்ருபையடியாகவந்த வஶீகரணவிஶேஷங்கள் என்று
ஈஶ்வரனுடைய ஸ்வப4ாவத்தையும், வைஷம்யநைர்க்4ருண்-
யங்களில்லாமையையும், ப3ந்த4மோக்ஷாதி3வ்யவஸ்தை2-
யையும் ப்ரமாணப்ரதிநியதமானபடியே அநுஸந்தி4த்து
ஸ்வதந்த்ரனுடைய க்ருபையிலேயூன்றிப் போரவடுக்கும்
என்று கருத்து' என்றும், நாலாமதி4காரத்திலே 'முக்தராவார்
- ஶாஸ்த்ரசோதி3தங்களான உபாயவிஶேஷங்களா-
லுண்டான ப4க3வத்ப்ரஸாத3த்தாலே அத்யந்தநிவ்ருத்த-
ஸம்ஸாரராய்' என்றும், 'ப்ரத4ாநவிரோதி4க்குச் செய்யும்
பரிஹாரத்தை, *தஸ்ய ச வஶீகரணம் தச்ச2ரணாக3திரேவ*
என்று கட2வல்லியில் வஶீகார்யபரம்பரையை வகுத்த-
விடத்தில் ப4ாஷ்யகாரர் அருளிச்செய்தார்' என்றும்,
இருபத்து மூன்றும் அதி4காரத்திலே 'க்ருபாவிஶிஷ்டனை
ஈஶ்வரன் *க்ருஷ்ணம் த4ர்மம் ஸநாதநம்* என்கிறபடியே
ஸித்3தே4ாபாயம். இவனுக்கு ப்ரஸாத3நங்களான ப4க்தி-
ப்ரபத்திகள் ஸாத்4யோபாயங்கள். ஓரதி4காரிவிஶேஷத்துக்கு
கர்த்தவ்யமாக *மாமேகம் ஶரணம் வ்ரஜ* என்று
விதி4க்கப்படுகிற ப்ரபத்தியை அதி4காரிவிஶேஷண-
மென்று சிலர் சொன்னவிடம் அதி4காரிவிஶேஷணத்துக்-
குச்சொல்லும் லக்ஷணத்தோடு சேராமையாலே அதிவாத3ம்.
இங்ஙனல்லாதபோது, ஈஶ்வரன் உபாயமாய் நிற்க,
உபாஸநாதி3ஶாஸ்த்ரார்த்த2ங்களும் அதி4காரிவிஶே-
ஷணங்களாம். ஆகையாலே ப்ரபத்தியுங்கூடஉபாயமன்றென்று

சிலர் அதிவாத$_{3}$ம் பண்ணுகிறதும் ஸித்$_{3}$தே$_{4}$ாபாயத்தி-
னுடைய ப்ராத$_{4}$ாந்யமடியாகவித்தனை. அது ப்ரத$_{4}$ாநமான
படி ப்ரஸாத$_{3}$நங்களாலே, ப்ரதிப$_{3}$ந்த$_{4}$கமான நிக்$_{3}$ரஹம்
ஶமித்தால் ஸ்வாப$_{4}$ாவிகாநுப$_{4}$வத்துக்கு ப்ரயோஜகமாகை-
யாலே' என்றும், 'ஸித்$_{3}$தே$_{4}$ாபாயம் ப்ரத$_{4}$ாநமேயாகிலும்,
தத்$_{3}$வஶீகரணார்த்த$_{2}$மான ஸாத்$_{4}$யோபாயாநுஷ்ட$_{2}$ாநத்துக்கு
*இன்றென்னை* இத்யாதி$_{3}$பூர்வாசார்யவாக்யவிரோத$_{4}$ம்
இல்லை' என்றும், 'இப்படி ஈஶ்வரஸ்வாதந்த்ர்யஸஹஜ-
காருண்யங்களடியாகவரும் கலக்கங்களுக்குப் பரிஹாரம்
சொன்னோம். ஸம்ப$_{3}$ந்த$_{4}$விஶேஷமடியாகவரும் கலக்கத்துக்கு
பரிஹாரம் சொல்லுகிறோம்' என்றும், 'இவையெல்லாம்
ஸ்வரூபத்துக்குப்பொருந்துமோ என்று சிலர் ஸித்$_{3}$தே$_{4}$ாபாய-
முக$_{2}$த்தாலே ஸாத்$_{4}$யோபாயஶரீரத்தை அழிக்கப்பார்ப்பர்-
கள். அவர்களை விலக்கும்படி – பரமர்ஷிகளும், ஶ்ரீப$_{4}$ாஷ்யகாரா-
தி$_{3}$களும், விஶ்வாஸபூர்வகப்ரார்த்த$_{2}$நாத்மநிக்ஷேபாதி$_{3}$-
களைத்தாங்களும் அநுஷ்டி$_{2}$த்து, இதுக்கு ஶாஸ்த்ரங்களை
மூதலிப்பித்துக்கொண்டு உபதே$_{3}$ஶபரம்பரையும் நடத்திப்
போருகையாலே ஶேஷித்வாதி$_{3}$ஸம்ப$_{3}$ந்த$_{4}$ம் நித்யமேயா-
கிலும் கர்மவான்களான ஜீவர்கள்விஷயத்தில் ஈஶ்வரன்
ஒரு ஸாத்$_{4}$யோபாயவிஶேஷத்தை முன்னிட்டல்லது ரக்ஷியான்
என்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே ஶாஸ்த்ரநிஷ்ட$_{2}$ருக்கு
பரிக்$_{3}$ரஹிக்கவேணும்' என்றும், 'தன்னை ஈஶ்வரன்
ரக்ஷிக்கும்போது ஸம்ப$_{3}$ந்த$_{4}$த்தோடுகூட விலக்காமையே
வேண்டுவதென்னில், அதுவும் அநுபபந்நம்' என்றும்,
இருபத்தேழாமதி$_{4}$காரத்தில், 'ஸாத்$_{4}$யோபாயவிஶேஷத்தாலே
வஶீகார்யமுமாய் ப்ராப்யமுமாயிருக்கிற ஸித்$_{3}$தே$_{4}$ாபாயம்'
என்றும், 'புருஷார்த்த$_{2}$த்துக்கு ஸாத$_{4}$நமாக ஶாஸ்த்ரவிஹித-
மான ஸாத்$_{4}$யோபாயமும் ப$_{4}$ரந்யாஸபர்யந்தமாக அகிஞ்சந-
னுக்கு அநிஷ்டநிவ்ருத்தியைச்சொல்லுகிற நமஸ்ஸிலே
ஆர்த்த$_{2}$மாக அநுஸந்தே$_{4}$யம்' என்றும், 'உபாயப்ரகாரம்
வஶீகரணவிஶேஷம்' என்றும், 'அகிஞ்சநனுன அதி$_{4}$காரிக்கு
யத$_{2}$ாவிதி$_{4}$ரக்ஷாபேக்ஷாபூர்வகப$_{4}$ரந்யாஸத்தையொழிய
வேறொன்றால் அபேக்ஷயில்லாத ஸித்$_{3}$தே$_{4}$ாபாயத்தை

"மாமேகம்" என்று காட்டி அதினாலே வஶீகரணார்த்த$_2$மான
ஸாத்$_4$யோபாயத்தை "ஶரணம் வ்ரஜ" என்று விதி$_4$யாலே
காட்டுகிறது. இப்படி விதி$_4$க்கிற ப்ரபத்திரூபவித்$_3$யைக்கு
ஶரண்யப்ரஸாத$_3$நமாசோதி$_3$தத்வத்தாலே வருகிற உபாய-
த்வமும் ப$_4$க்தியோடு துல்யம்' என்றும், இருபத்தொன்பதா-
மதி$_4$காரத்திலே '"என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்
அதுவுமவனதின்னருளே" என்றும், "இசைவித்தென்னை
உன் தாளிணைக்கீழிருத்துமம்மானே" என்றும் சொல்லு-
கிறபடியே உபாயபூ$_4$தனான அவன்செய்விக்கச்செய்கிற
வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக எண்ணுகை
உசிதமன்றென்று ஏகஶப்$_3$த$_3$தாத்பர்யம். இப்படி ஸித்$_3$தோ$_4$-
பாயத்தைப்பற்ற ஸாத்$_4$யோபாயம் வ்யாஜமாத்ரமாய் ப்ரதா$_2$ந-
மின்றிக்கே நிற்கிற நிலையைப்பற்ற 'ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாந-
மாத்ரம், ஸித்$_3$தோ$_4$பாயப்ரதிபத்திமாத்ரம், அநிவாரணமாத்ரம்,
அநுமதிமாத்ரம், அசித்$_3$வ்யாவ்ருத்திமாத்ரம், சைதந்யக்ருத்யம்,
சித்தஸமாதா$_4$நம், அதி$_4$காரிவிஶேஷணம்' என்று இப்புடை-
களிலே அதிவாத$_3$ம் பண்ணினார்கள். இவ்வந்யபரோக்தியைக்
கொண்டு இவைதானே அர்த்த$_2$மென்று அறுதியிடவொண்ணாது.
இவை எல்லாம் "ஶரணம் வ்ரஜ" என்கிற விதி$_4$க்கு விருத்$_3$த$_4$ங்-
களாம். அதிப்ரஸங்கா$_3$தி$_3$தோ$_3$ஷங்களுமுண்டு. அதெங்ஙனே
யென்னில், ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாநமாத்ரமென்றாலும், ஸித்$_3$தோ$_4$-
பாயப்ரதிபத்திமாத்ரமென்றாலும், அது வாக்யமாத்ரஜந்ய-
மாகில் விதி$_4$விஷயமாகமாட்டாது. அவிதே$_4$யஜ்ஞாநத்தாலே
மோக்ஷமென்பாருக்கு உபாஸநாதி$_3$விதி$_4$விரோத$_4$ம் பா$_4$ஷ்-
யாதி$_3$ஸித்$_3$த$_4$ம். தத்வஜ்ஞாநமுடையவருக்குப் பின்பு கர்த்த-
வ்யமான ஜ்ஞாநாந்தரமாகில், ப்ரபத்தியினுடைய விதி$_4$-
லக்ஷணானுஷ்டா$_2$நவாக்யங்கள் சொல்லுகிறபடியே இதன்
ஸ்வரூபமங்கீ$_3$கரிக்கவேணும். ஸித்$_3$தோ$_4$பாயஸ்வீகாரமென்ற
பாசுரத்துக்கும் - ஸித்$_3$தோ$_4$பாயத்தையறிந்து அது தனக்கு
கார்யகரமாம்படிபண்ணுகிற விதி$_4$ப்ராப்தப்ரார்த்த$_2$நாபூர்வக-
ப$_4$ரந்யாஸரூபாதி$_4$காரிக்ருத்யத்திலேயிறே தாத்பர்யம்.
அநிவாரணமாத்ரமென்றது விலக்காதமாத்ரமானால் ரக்ஷக-
னான ஈஶ்வரனை இவன் முன்பு ப்ரப$_3$லனாய் விலக்கினானா-
கில், ஈஶ்வரனுடைய ஈஶ்வரத்வம் ஸங்குசிதமாம். அபரா-

த4த்தாலே நிக்3ரஹத்தை உண்டாக்கி விலக்கினானாகில், இவன் பண்ணுகிற ப்ரபத்திப்ரஸாத3நமேயாக வேணும். ஸ்வரக்ஷணார்த்த2வ்யாபாரத்தாலே விலக்கினானென்னில் – நிர்வ்யாபாரமான ஸுஷுப்திப்ரளயாத்3ய-வஸ்தை2களிலும், வ்யாபரிக்க யோக்3யனாயிருக்கிற ஜாக்3ரத்3த3ஶையிலும் விலக்காதேயிருக்கும்போதும் ஈஶ்வரன் மோக்ஷப்ரத3ாநம் பண்ண ப்ரஸங்கி3க்கும். அநுமதிமாத்ரமென்றால், அது உபாஸகனுக்கும் துல்யம். அசித்3வ்யாவ்ருத்திமாத்ரம் ப்ரதி-கூலத3ஶையிலுமுண்டாகையாலே இவ்வளவே ரக்ஷணீய-தைக்கு உறுப்பாகாது. சைதந்யக்ருத்யமென்றால், உபாஸநாதி3-களும் மற்றுமுள்ள சேதநவ்ருத்திகளுமெல்லாம் சைதந்ய-க்ருத்யமாகையாலே இதுக்கொரு வாசி சொல்லிற்றாகாது. சேதநனுக்குத்தானே வருமதென்று விவக்ஷிக்கில், உபதே3ஶா-தி3கள் வேண்டாதொழியும். ப2லாநுபயுக்தசித்தஸமாத4ாந-மாத்ரமேயென்னில், தந்தாம் ருச்யநுரூபமாக ப்ரதிபுருஷம் வேறுபடும். "வ்ரஜ" என்று விதே4யமாய், ப2லதத்காமநாதி3க-ளன்றிக்கேயிருக்கிறவித்தை அதி4காரிவிஶேஷணமென்ன-வொண்ணாது. கர்த்தவ்யமாக விதி4க்கிற ப்ரபத்தி தனக்கே இப்படி ஏதேனுமொரு கண்ணழிவு பண்ணில், உபாஸநாதி3-களையும் இப்படிக்கண்ணழிக்கலாம். அப்போதும், இம்-முக2ங்களாலே உபாஸநாதி3களிற்காட்டில் ப்ரபத்திக்கு வ்யாவ்ருத்திசொல்ல நினைத்தது தலைக்கட்டாது. ஸ்வ-விஷயஸ்வீகாரவிஶிஷ்டமாய்க்கொண்டு ப2லப்ரத3மாகா-நிற்கச்செய்தே இஸ்ஸித்3தே4ாபாயம் ஸ்வீகாரத்தாலும் நிரபேக்ஷமென்று பு3த்3தி4பண்ணவேணுமென்னில், இது த்3ருஷ்டிவிதி4போலே ஆரோபிதமாதல் ஸ்வவசநவிருத்3த4மாத-லாம். ஆகையால் ஈஶ்வரன் ப்ரஸாத3நீயனாய் ப்ரத4ாநமான ஸித்3தே4ாபாயம், ப4க்திப்ரபத்திகளிரண்டும் ப்ரஸாத3நங்க-ளாய்க்கொண்டு ப்ரத4ாநமல்லாத ஸாத்4யோபாயங்கள். 'இவையிரண்டத்தொன்றிலே யத2ாதி4காரம் நிலையாகக் கடவது' என்றும், 'இப்படி ப4க்த்யாதி3கள்போலே ஶரணாக3தி-த4ர்மமும் கர்த்தவ்யமாக விதி4க்கப்படுகையாலே 'தன்னால்வரும் நன்மை விலைப்பால் போலே, ஈஶ்வரனால் வரும் நன்மை முலைப்பால்போலே' என்கிற பிள்ளான்

வார்த்தைக்கு ப4க்திப்ரபத்த்யாதி3களெல்லாம் அவனுல் வருகிறதென்று நினைக்கவேணுமென்று தன்னுடைய பராதீ4நகர்த்ருத்வத்திலே தாத்பர்யம்.

'அந்யவிஶ்வாஸஸித்3த்4யர்த்த2ம் ப4க்த்யுபாயவிதி4ம் வத3ந்। ஸர்வஶாஸ்த்ரேஷ்வவிஶ்வாஸம் ஆத4த்தே முக2பே4த3த:॥ மத்3யோபஹதபாத்ரஸ்த2தீர்த்த2த்3ருஷ்டாந்தவர்ணநம் । அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி ப4க்திவத்' ஆகையால் "ப்ரஸீத3 மத்3வ்ருத்தமசிந்தயித்வா" இத்யாதி3கள், முன்பு தான் பண்ணின ப்ரபத்திக்கு க்ஷமைகொள்ளுகிற படியென்று சிலர் சொல்லுமதுவும் அஹங்காரஸ்பர்ஶாதி3- ஶங்கையைப்பற்றவாமத்தனையல்லது யதா2ஶாஸ்த்ரமநுஷ்- டி2த்த ப்ரபத்தி அபராத4மாய் அதுக்கு க்ஷமை கொள்ளுகிற படியன்று. அப்படியாகில், "பிதாமஹம் நாத2முநிம் விலோக்ய ப்ரஸீத3" என்கிற பூர்வாசார்யபுரஸ்காராதி3களும் தான் செய்கிறதாகையாலே அதுக்கு க்ஷமை கொள்ளவேண்டி அநவஸ்தை2யாம். இது ஸ்வபரநிர்வாஹமாகில், அது போலே முன்பு பண்ணின ப்ரபத3நமும் ஸ்வபரநிர்வாஹ- மென்னலாம். இங்குச்சொல்லும் குதர்க்கங்களாலே பூர்வர்கள் பண்ணின ப்ரபத்தியும் அபராத4மாயறுகை- யாலே பூர்வர்களை முன்னிடவுமொண்ணுதொழியும்' என்றும், 'புந:ப்ரபத3நம் வேண்டாவென்கையும் பரபக்ஷமாம். இவ்- விடத்திலே சிலர் – "வ்ரஜ" இத்யாதி3விதி4களை அந்யபரங்க- ளாக்கி "யோந்யதா2ஸந்தமாத்மாநம் அந்யதா2 ப்ரதி- பத்3யதே। கிம்தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹா- ரிணு", "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி3 ஸ்தி2த: । தேந சேத3விவாத3ஸ்தே மா க3ங்கா3ம் மாகுருந் க3ம:", "ஆத்மதா3ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபா4வம் ச ஸதா3 ஸ்மர" இத்யாதி3களில் தாத்பர்யக3திகளையும் பராமர்ஶியாதே இவற்றைக்கொண்டு ஶாஸ்த்ரஜந்யஸம்ப3ந்த4ஜ்ஞாந- மொழிய வேறு முமுக்ஷுவுக்கு அநுஷ்டே2யமாய் இருப்பதொரு உபாயமில்லை என்பார்கள். இது ப4க்திப்ரபத்த்யாதி3விதி4- ஸ்வாரஸ்யவிருத்3த4ம்' என்றும், 'இங்ஙனல்லாத போது புந:ப்ரபத்திவிதா4யகஶாஸ்த்ரமும், அப்படிகளுக்கு ஶிஷ்டா-

நுஷ்டா2நமும் பூர்வஸம்ப்ரதா3யமும் விரோதி4க்கும்' என்றும், இருபத்துநாலாமதி4காரத்திலே 'உபாஸநாதி3கள் ஸ்வரூபவிருத்3த4ங்களென்று சிலர் சொல்லுவர்கள். இதுவும் ப்ரபத்தியை ஸ்துதிக்கைக்காக அதிவாத3ம் பண்ணினார்களாமித்தனை. எங்ஙனேயென்னில், நித்ய-மான ஆத்மஸ்வரூபத்துக்கு இவை நாஶகங்களாய்க்கொண்டு ஸ்வரூபவிருத்3த4ங்களென்னவொண்ணாது' என்றும், 'மோக்ஷப்ரதிகூலங்களான ராக3ாத்3யுபாதி4களாலே வந்த காம்யநிஷித்3த4ங்கள்போலே ப3ந்த4கங்களல்லாமையாலும், மோக்ஷார்த்தி2தனக்கே விதி4க்கையாலும் உபாஸநாதி3க-ளுக்கு ஶாஸ்த்ரமுக2த்தாலே அநர்த்த2ாவஹத்வரூபமான ஸ்வரூபவிரோத4ம் சொல்லவொண்ணாது. ஆகையால், ஆத்மஸ்வரூபத்தைப்பற்ற உபாஸநாதி3களுக்கு நாஶகத்வா-ஸம்ப4ாவிதத்வாநர்த்த2ாவஹத்வங்களில்லாமையாலே ஒரு படியாலும் ஸ்வரூபவிரோத4ப்ரஸங்க3மில்லை' என்றும், 'உபாஸநாதி3கள் அஹங்காராதி3தூ3ர்ப்ப4ங்களென்னுமிடம் ஶாஸ்த்ரமிசையாதிருக்கச் செய்தே ஆரோபித்தார்களத்தனை' என்றும், 'அபி4சாராதி3களை விதி4த்த கட்டளையிலே ஶாஸ்த்ர-ப்ரரோசநாதி3களில் அபி4ஸந்தி4யாலே அதி4காரவிஶேஷத்திலே உபாஸநாதி3களை விதி4த்ததத்தனையன்றோ! முமுக்ஷுவுக்கு ப்ராப்யப்ராபகங்கள் ஏகமாகையாலே ப்ராப்யாநுரூபமான உபாயம் ஸர்வேஶ்வரனொருவனுமேயாகையாலன்றோ? - *அத2 பாதகபீ4தஸ்த்வம் ஸர்வப4ாவேந ப4ாரத । விமுக்தாந்ய-ஸமாரம்பே4ா நாராயணபரோ ப4வ* என்று த4ர்மதே3வதை தன் புத்ரனுக்கு உபாஸநாதி3களை ப்ராப்யவிரோதி4க-ளென்று நினைத்து நிந்தி3த்ததென்னில், அதுவும் அத்யந்தா-நுபபந்நம்' என்றும், '*அத2 பாதகபீ4தஸ்த்வம்* என்கிற விடத்திலும் 'பாதகஶப்3த3த்தாலே உபாஸநாதி3களை நிந்திக்கிற {நினைக்கிற}தென்கைக்கும் ப்ரமாணமில்லை. ஆகையால் முமுக்ஷுவுக்கு விஹிதங்களாகையாலே ப4க்திப்ரபத்திக-ளிரண்டும் யதா2ாதி4காரம் பரிக்3ராஹ்யங்கள்' என்றும், 'இவை *அகிஞ்சநோऽநந்யக3தி:* என்றிருக்குமதி4காரிக்கு ஸ்வாதி4காரவிருத்3த4ங்களென்ன ப்ராப்தம். இவ்வதி4கார-விரோத4மறியாதே உபாஸநாதி3களிலே ப்ரவர்த்திக்குமவனைப்

பற்ற "நரஸ்ய பு₃த்₃தி₄தௌ₃ர்ப₃ல்யாத் உபாயாந்தர-மிஷ்யதே* என்றதும்' என்றும், 'இப்படி இவ்வுபாயத்தின் அதி₄காரத்திலும் ஸ்வரூபத்திலும் வரும் கலக்கங்கள் ஶமிப்பித்தோம். இனிமேல் பரிகரங்களில் வரும் வ்யாமோ-ஹம் ஶமிப்பிக்கிறோம். இவ்வுபாயத்துக்கு ஆநுகூல்யஸங்கல்பா-தி₃கள் வேணுமோ?' '*ஆர்த்தோ வா யதி₃ வா த்₃ருப்த :* என்றும், *மித்ரப₄ாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கத₂ஞ்சந । தோ₃ஷோ யத்₃யபி தஸ்ய ஸ்யாத்* என்றும், *யதி₃ வா ராவணஸ்ஸ்வயம்* என்றும் சொல்லுகிற *ரிபூணமபி வத்ஸலனுன ஶரண்யன் ஶரணாக₃தனுடைய தோ₃ஷங்களைப்பார்க்குமோ? *அநாலோசிதவிஶேஷாஶேஷ-லோகஶரண்ய* என்றன்றோ பூர்வர்கள் பாசுரம். ஆகையாலிவை ஸம்ப₄ாவிதஸ்வப₄ாவங்களாமித்தனை-யன்றோவென்று சிலர் சொல்லுவர்கள். இதுக்கு - ப்ரபத்த்யுத்தரகாலத்தில் ஆநுகூல்யாதி₃கள் அநுவர்த்தியா-தொழியிலும், ப்ரதிஸமாத₄ாநம் பிறந்து ப்ரபத்திப₂லமும் குறைவற்றிருக்குமென்கையிலே தாத்பர்யம் கொள்ளலாம். இங்ஙனல்லாதபோது *ஷட்₃வித₄ா ஶரணாக₃தி:* என்றும், *ந்யாஸ: பஞ்சாங்க₃ஸம்யுத:* என்றும், *ஸ்வாங்கை₃: பஞ்சபி₄ராவ்ருதாம்* என்றும், அங்கா₃ங்கி₃களை விப₄ஜித்-துச் சொல்லுகிற பல ப்ரமாணங்களுக்கும் விருத்₃த₄ம்' என்றும், இருபத்தெட்டாமதி₄காரத்திலே -'ஶ்ரீமானுன நாரா-யணன் திருவடிகளிலே அங்க₃பஞ்சகஸம்பந்நமான ஆத்ம-ரக்ஷாப₄ரஸமர்ப்பணம் பண்ணுகிறேனென்று த்₃வயத்தின் திரண்ட பொருள்...இங்ஙனல்லாதபோது ப₄க்திரூப-மோக்ஷோபாயங்களை விதி₄க்கிற ஶாஸ்த்ரங்களெல்லாம் அத்யந்தவ்யாகுலங்களாம்' என்றும் சொல்லப்பட்டது.

இதி பூர்வ:பக்ஷ:

அத₂ ஸித்₃த₄ாந்த:

ந ஶரணவசஸ: ஸாத₄நத்வே ப்ரமாணம்

ப்ரபத்திக்கு உபாயத்வத்தில் ப்ரமாணமில்லை (உபாயமென்கை

ப்ரமாணவிருத்$_3$த$_4$மாம்.) எங்ஙனேயென்னில் –*இன்றென்னைப் பொருளாக்கி* என்கிற பாட்டுக்கு – அநாதி$_3$காலம் ஈஸ்வரன் சேதநனை க்ருபை பண்ணுமைக்கு ப்ரத$_4$மநஹேது ஈஸ்வர-ஸ்வாதந்த்ர்யமென்றும், அப்ரத$_4$மநஹேது ஆஜ்ஞாதிலங்க$_4$ந-மென்றும், இவன் க்ருபை பண்ணுகைக்கு அப்ரத$_4$மநஹேது ப்ரபத்தி என்றும், தாத்பர்யம் கல்பிக்கைக்கு ப்ரமாணமில்லை. ப்ரத்யுத – நிர்ஹேதுகத்வமே இதுக்கு தாத்பர்யமென்கைக்கு ப்ரமாணங்களு(மு)ண்டு. *ஸ்வகர்மபி$_4$:ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே$_2$ ப்$_4$ராம்யமாணே* என்கையாலும், *முன்செய்த முழுவினை-யால்*, *யானேயென்னையறியகிலாதே* என்று ஆழ்வார் தாமே அருளிச்செய்கையாலும் அநாதி$_3$காலமிழவுக்கடி கர்மம். *ஜீவே து$_3$:க$_2$ாகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுப-ஜாயதே*, *விதிவாய்க்கின்று காப்பாரார்*, *நாஸௌ புருஷகாரேண* புருஷகாரமும் மிகையாம்படியிறேயவன் படி. *செய்தாரேல் நன்று செய்தாரென்னுமவனிறே.

(ந சாப்யந்யேந ஹேதுநா) உபாயாந்தரத்தாலன்று. (கேவலம் ஸ்வேச்ச$_2$யா) அப்ரத$_4$மநஹேதுவுமில்லை. (ஏவ) இப்படியே. இதில் ஸம்ஶயலேஶமுமில்லை. (அஹம் ப்ரேக்ஷே) *அஸங்கல்பிதமப்யஸ்ய ப்ரேரணம் யத்க்ருதம் மயா। விஷ்ணவாயதநதீ$_3$பஸ்ய தஸ்யைதத்$_3$பு$_4$ஞ்யதே ப$_2$லம்*, *மாதவனென்றதே கொண்டு*, *என்னுள் புகுந்திருந்து*, *திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்ன திருமால் வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்* இத்யாதி$_3$ப்படியே வைஷம்யநைர்க்$_4$ருண்யபரிஹாரார்த்த$_2$மாக யாத்$_3$ருச்சி$_2$க-ப்ராஸங்கி$_3$கஸுக்ருதவிஶேஷங்களை கல்பித்து கடாக்ஷிப்பன். (கஞ்சித்) அதி$_4$காரிநியமமில்லை. (கதா$_3$சந) காலநியமமில்லை என்றித்யாதி$_3$ப்படியே ப்ரமாணங்களுண்டாகையாலே இன்று பேற்றுக்கடி க்ருபையேயாகையால் இதுக்கு வஶீகர-ணோபாயம் ஸாத$_4$கமன்று' என்றித்யாதி$_3$யும், *ஸைவ தஸ்யாபி வஶீகரணம் ப$_4$வதி* என்று ஶரணாக$_3$தியை தச்சே$_2$ஷதாப்ரதிபத்தியென்று அதி$_4$காரிவிஶேஷணமாக ஶ்ருதப்ரகாஶிகையிலே ப$_4$ட்டர் விவரித்தருளினார்.

(ப$_4$ாஷ்யகாரரும் ப$_4$ாஷ்யத்திலே ப$_4$க்தியை, *ஸ்வாஜ்ஞாதி-வ்ருத்திவ்யவஸாய நிவ்ருத்திமாத்ரேண* இத்யாதி$_3$யாலே அதி$_4$காரிவிஶேஷணமாக அருளிச்செய்தார்.) ஆகையால் ஆழ்வார் தி$_3$வ்யஸூக்திவிரோத$_4$மும் ப$_4$ாஷ்யகாரர் தி$_3$வ்ய-ஸூக்திவிரோத$_4$மும், ஶ்ருதப்ரகாஶிகாப$_4$ட்டர்தி$_3$வ்யஸூக்தி-விரோத$_4$மும், வஶீகரணோபாயம் ஆர்த்த$_2$மாகக் கல்பிக்கிற விடமெங்கும் து$_3$ர்வாரம். ஸமந்வயாதி$_4$கரணத்திலே ஶ்ருத-ப்ரகாஶிகையிலே ப$_4$ட்டர் ஶேஷஶேஷிப$_4$ாவரூபோபாஸ-நாத்மகஜ்ஞாநத்தாலே சேதநேஶ்வரர்கள் ஸங்க$_3$தராகிற-தற்கு – த்$_3$ருஷ்டாந்தமாக *தாவுபெ$_4$ள ஸங்க$_3$ச்சே$_2$தே* என்று பூர்வம் அவிஜ்ஞாதஸம்ப$_3$ந்த$_4$ராயிருக்கிற ராஜபுத்ரர்கள் ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாநாநந்தரம் ஸங்க$_3$தராவர்களென்று அருளிச்செய்கையாலே ஸம்ப$_3$ந்த$_4$ஜ்ஞாநமே போருமென்-கிறத்தை ப்ரகாஶிப்பித்தருளினார். ரிஷிகளுடைய தாத்பர்ய-ஜ்ஞரான ப$_4$ாஷ்யகாரர் க$_3$த்யத்திலே ப்ரபத்தி பண்ணின-துக்கு க்ஷாமணம் பண்ணியருளினார் என்றும் பிள்ளை முதலானார் வ்யாக்$_2$யாநம் பண்ணியருளினார்கள்.

(ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ருத்தியைச் சொல்லுகிற நமஸ்ஸிலே ஸ்வரக்ஷணார்த்த$_2$மான ஸாத்$_4$யோபாயத்தை ஆர்த்த$_2$மாகச்சொல்லுகை அஸங்க$_3$தம். அகிஞ்சநனான அதி$_4$காரிக்கு ப$_4$ரந்யாஸத்தையொழிய வேறொன்றபேக்ஷை-யில்லாத ஸித்$_3$தே$_4$ாபாயத்தை *மாமேகம்* என்று காட்டி அவனுடைய வஶீகரணார்த்த$_2$மான ஸாத்$_4$யோபாயத்தை *ஶரணம் வ்ரஜ* என்று விதி$_4$க்கையாலே காட்டுகிறதென்கை-யும், 'ஏக'ஶப்$_3$த$_3$ஸ்வாரஸ்யவிருத்$_3$த$_4$ம். ப$_4$ாஷ்யகாரரும் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பிபக்கலிலே எழுந்தருளி மாஸோபவாஸம் பண்ணி சூழரவுகொண்டு பெற்ற அர்த்த$_2$த்துக்கு விருத்$_3$த$_4$மாகையாலே ஸம்ப்ரதா$_3$ய-விருத்$_3$த$_4$ம்.

*ஶரணம் வ்ரஜ* என்று சோதி$_3$தத்வத்தால் வருகிற அதினுடைய உபாயத்வம் *ஏக*ஶப்$_3$த$_3$த்தாலே அபோதி$_3$தம். *என் உணர்வினுள்ளேயிருத்தினேன்–அதுவும் அவனதின்னருளே*

என்கிறவிடத்தில் - இருத்துகையும், *இசைவித்தென்னை* என்கிறவிசைவுமே அவனுடைய அருளின் கார்யமாகையாலே அவ்வருளுக்கு அப்ரதா4நமாகவும் காரணமன்றிறே. பா4ஷ்ய-காரர் திருவாய்மொழியைக்கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவரே. அப்படிப்பட்டவர் *ஆறெனக்கு நின்பாதமே*, *கழல்களவையே சரணாக*, *நாகணைமிசைநம்பிரான் சரணே சரண்*, *அடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்கிற-வித்யாதி3 ஆழ்வார்பாசுரத்துக்கு விருத்3த4மாக ப்ரபத்தியை அப்ரதா4நவஶீகரணோபாயமாகவும் திருவுள்ளம் பற்றுரிறே. அப்படிப்பட்டவர் வஶீகரணோபாயமென்றால் அதுக்குக் கருத்து, குத்3ருஷ்டிகளுக்கு ரஹஸ்யோபாயத்தை வெளியிட வொண்ணாமையிறே. உபாஸநாத்மகஜ்ஞாநத்தை பா4ஷ்யத்-திலே அருளிச்செய்ததுக்குக்கருத்து - அதுவே க3த்3ய-வ்யாக்2யாநத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார். பா4ஷ்ய-காரர் தாம் ஸ்வீகாரத்தில் அநுபாயத்வமாகிற *ஏக*ஶப்3த3-தாத்பர்யத்தை அருமைப்பட்டிறே பெற்றது. ஆகையால் அதுவேயிறே இவர்க்குத் திருவுள்ளம். அப்படிப்பட்ட எம்பெருமானார் திருவுள்ளத்துக்கு விருத்3த4மாக *ஏக*ஶப்3த3-தாத்பர்யகல்பநம் அத்யந்தஸாஹஸகார்யமாமத்தனை,) 'ஸம்ப3ந்த4ஜ்ஞாநமாத்ரம், ஸித்3தோ4பாயப்ரதிபத்திமாத்ரம், அநிவாரணமாத்ரம், அநுமதிமாத்ரம், அசித்3வ்யாவ்ருத்தி-மாத்ரம், சைதந்யகார்யம், சித்தஸமாதா4நார்த்த2ம், அதி4கா-ரிவிஶேஷணம்' என்கை அதிவாத3மாகிறதும், {இவ்விடம் தாளகோஶத்தில் ஶிதி2லமாயிருப்பதால் ஶாத்3த4பங்க்தி காண-வில்லை}*ஏஷ து வா அதிவத3தி யஸ்ஸத்யேந அதிவத3தி* என்றாலும் விஹிதமான அதிவாத3மிறே. ஆகையால் இவைதானே அர்த்த2மென்று அறுதியிடவேணும்.

இவையெல்லாம் *மாமேகம் ஶரணம் வ்ரஜ* என்கிற விதி4க்கு அத்யந்தம் அநுகூலங்களிறே. ப்ரமாணவிருத்3த4ங்களான அர்த்த2ங்களுக்கேயிறே அதிப்ரஸங்கா3தி3தோ3ஷங்கள் உள்ளது. ஸம்ப3ந்த4ஜ்ஞாநமும், ஸித்3தோ4பாயப்ரதி-பத்தியும் ஆசார்யோபதி3ஷ்டமான திருமந்த்ரரூபவாக்ய-ஜந்யஜ்ஞாநமாத்ரமுமாகலாம், தத்வஜ்ஞாநமுடையவ-

ணுக்குப் பின்பு "ப்ரபத்3யே" என்கிற வர்த்தமாநநிர்தே3ஶாத்தாலே ஸதா3நுஸந்தே4யமான ஜ்ஞாநமுமாகலாம். 'இது உபாயமன்று, ஈஶ்வரனே உபாயம்' என்பாருக்கு உபாஸநாதி3வித்4யாநுகூல்யமும், அதினுடைய அதி4காரிவிஶேஷணத்வப்ரதிபாத3நமும் பா4ஷ்யாதி3யில் ஸித்3த4ம். ப்ரபத்தியினுடைய – "மாமேகம் ஶரணம் வ்ரஜ", "ப்ரார்த்த2நாமதி: ஶரணாக3தி:", "ஸ்வப்ரவ்ருத்திநிவ்ருத்தி: ப்ரபத்தி:", "சரணௌ ஶரணம் ப்ரபத்3யே" என்கிற விதி4லக்ஷணாநுஷ்டா2நவாக்யங்கள் சொல்லுகிறபடியே அதி4காரிவிஶேஷணமாக அங்கீ3கரிக்கவேணும். ஸித்3தோ4பாயஸ்வீகாரமென்ற பாசுரத்துக்கும் அதி4காரிக்ருத்யத்திலே தாத்பர்யமென்ற அம்ஶம் ப்ராமாணிகம். அதிரிக்தம் அப்ராமாணிகம். விலக்காதமாத்ரமாணாலும் அநாதி3காலம் ஆஜ்ஞாதிவ்ருத்திவ்யவஸாயத்தாலே விலக்கென்று பண்ணுகிற தந்நிவ்ருத்திரூபப்ரபத்தி அதி4காரிஸம்பத்தியைக்காட்டுகிற வழியாலே ப்ரஸாத3நமாகலாம். அநாதி3காலம் ஸ்வரக்ஷணார்த்த2வ்யாபாரத்தாலே விலக்கினனேயாகிலும், இப்போது 'ப4க3வத்ப்ரவ்ருத்திவிரோதி4ஸ்வப்ரவ்ருத்தி' என்று அறிந்து தந்நிவ்ருத்தியாலே உண்டாகிற விலக்காமை ஸுஷுப்த்யாத்3யவஸ்த்தை2களில் இல்லையிறே. ஆகையால் அவ்வவஸ்த்தை2யில் மோக்ஷம் வரவேணுமென்கை அஸங்க3தம். அநுமதிமாத்ரமென்றாலும், அது உபாஸநத்துக்குத் துல்யமென்கை இஷ்டம். பு3த்3தி4தௌ3ர்ப3ல்யநிப3ந்த4நமான சோதி3தத்வத்தால் வருகிற உபாயத்வம் கழியுமே. "அஸ்தி ப்3ரஹ்மேதிசேத்3வேத3 ஸந்தமேநம்" என்கிற அசித்3வ்யாவ்ருத்தியில்லையே ப்ராதிகூல்யத3ஶையில். ஆகையால் அசித்3வ்யாவ்ருத்தியே ரக்ஷணீயதைக்குப்போரும். சைதந்யக்ருத்யமென்றாலும், இவ்விடத்தில் சைதந்யம் ஸ்வரூபயாதா2த்ம்ய விஷயமாகையாலே "அஜ்ஞாநமதோந்யது3க்தம்" என்கிறபடியே ஸ்வரூபவிஷயமான உபாஸநாதி3களும் பு3த்3தி4தௌ3ர்ப3ல்யநிப3ந்த4நமாகையாலே இதுக்கு நெடுவாசி சொல்லிற்றும். ஸாமாந்யேந சேதநனுக்குத் தானே வருமென்று அநுக்தோபாலம்ப4ம். சித்தஸமாதா4நம் என்றது தந்தாம் ருச்யநுரூபமாக ப2லம் பே4தி3க்கிலும் அவ்வோ

ப2லாநுகு3ணரக்ஷணம் இனிப்பண்ணுமென்றும், சித்த-ஸமாத4ாநம் ப்ரபத்தாக்களில் வேறுபடாது. ப்ரபத்தி ப்ரார்த்த2நா-ரூபமாய், காமனையிலே அந்தர்ப4விக்கையாலே அதி4காரி-விஶேஷணமென்னத்தட்டில்லை. இவ்வதி4காரிக்கு அத்3வேஷம் தொடங்கி கைங்கர்யபர்யந்தம் ப2லபரம்பரையாகையாலும் அநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநமும் ப2லமாகையாலும், ப4க3வத்-காமநாகார்யமாகையாலும், அதி4காரிவிஶேஷண-மென்னலாம். ப4க3வத்ப்ரவ்ருத்திவிரோதி4ஸ்வப்ரவ்ருத்தி-ரூபமான உபாஸநத்துக்கு தந்நிவ்ருத்திரூபத்வம் து3ர்வசம். ஆகையால், றெடுவாசி சொல்லிற்றும். ஸித்3தே4ாபாயம் இவன் ஸ்வீகரிக்கும் த3ஶையில் இவனுக்கதி4காரார்த்த2மாக தத்ஸாபேக்ஷமொழிய கார்யகாலத்தில் தந்நிரபேக்ஷமாகை-யாலே ஸ்வீகாரநிரபேக்ஷமென்னும் நினைவு ஆரோபமன்று. ஸ்வவசநவிருத்3த4முமன்று. அப்ரத4ாநஹேது வல்லா-மையாலே அவையிரண்டத்தொன்றிலாகவுமொண்ணாது. எம்பெருமானார்க்கு அபி4மதவிஷயமாய் அவர் பக்கலிலே பழுக்கக்கேட்டு, தந்நிஷ்ட2ரான திருக்குருகைப்பிரான் பிள்ளான் தி3வ்யஸூக்திக்கு முக்2யபா3ாதை4 இல்லாதிருக்க அமுக்2யதாத்பர்யகல்பநமந்யாய்யமென்று - ப4க்தி அநுபாயமென்றால் ப4க்திஶாஸ்த்ரத்தில் அவிஶ்வாஸம் வருமென்று தத்பரிஹாரார்த்த2மாக "நராணும் பு3த்3தி4-தை3ளர் ப3ல்யாது3பாயாந்தரமிஷ்யதே" என்கிறபடியே ஸ்வரூபவிஶ்வாஸத்துக்கே ஶாஸ்த்ரவிஶ்வாஸம் கார்ய-மாகையாலே ஒரு ஶாஸ்த்ரத்திலும் அவிஶ்வாஸம் வாராது. மத்3யோபஹதபாத்ரஸ்த2தீர்த்த2த்3ருஷ்டாந்தவர்ணநம் ப்ரபத்தியிலும் வருமென்றதுவும் வஶீகரணோபாயம் என்ற பக்ஷத்தில் வருமென்கையாலே இஷ்டம். "மத்3வ்ருத்த-மசிந்தயித்வா" என்று ஸ்வபூர்வவ்ருத்தத்தை நினைத்து இப்படியிறே ப்ரபத்தி பண்ணுகிறனென்று ஸ்வாமி திரு-வுள்ளத்திலே கலக்கத்தை எண்ணி அதுக்கு க்ஷமை கொள்ளுகிறதென்று தோற்றநிற்க, அல்லாத அஹங்கார-ஶங்கையைக்கல்பித்து தந்நிப3ந்த4நமென்கை பரமாசார்யர் திருவுள்ளக்கலக்கத்துக்கு ஹேதுவாம். ஆசார்யபுரஸ்காரத்தாலே ப்ரபத3நகர்த்தா தாமன்றிக்கே

ஆசார்யனாகையாலே அவ்விடத்தில் அநவஸ்தை2யில்லை. "பாங்கலராகிலும் செயல் நன்றாகத்திருத்திப்பணிகொள்" ளுமாசார்யன் திருவுள்ளம் பூர்வவ்ருத்தத்தையெண்ணிக் கலங்காமையாலே அவ்விடத்திலும் அநவஸ்தை2யில்லை. "அதுவுமவனதின்னருளே" என்கிறபடியன்றிக்கே ஆசார்ய-னாகையாலே அவன் ப்ரஸாத3கார்யமான ப்ரபத்தியை அவனுக்கு ப்ரஸாத3நமென்னுமிடத்திலே ஆத்மாஶ்ரயமும், அந்யோந்யாஶ்ரயமும், அநவஸ்தை2யும் வரும். எங்ஙனே யென்னில், ஸாத்4யோபாயம் தன்னையுண்டாக்குகிற ஸித்3தோ4பாயத்தை வஶீகரிக்கும்போது தானுண்டாகையாலே ஆத்மாஶ்ரயம். ஸாத்4யோபாயம் வஶீகரணத்தை அபேக்ஷிக்-கையாலும், வஶீகரணம் ஸாத்4யோபாயத்தை அபேக்ஷிக்-கையாலும் அந்யோந்யாஶ்ரயம். ஸாத்4யோபாயமுண்டாயே-யிதுக்கு வஶீகரணத்வமுண்டாகவேணும், ஸாத்4யோபாயனுக-த்வம் ஸித்3தே4பாயத்துக்கு உண்டாயே ஸாத்4யோபாயம் ஸித்3தி4க்கவேணுமென்று சக்ரகம். இப்போது ஸாத்4யோ-பாயமுண்டாகை அவனருளாலே. அந்தவருள் அதுக்கு முந்தின அருளாலே' என்று அநவஸ்தை2யாம். பீ3ஜாங்குர-ந்யாயத்தாலே அநவஸ்தை2 தோ3ஷாய அன்றென்னில், மேல் வஶீகரணபரம்பரைக்கு ஸாத்4யோபாயப்ரத4நபரம்-பரையே ப2லமாய் அநிர்மோக்ஷம் ப்ரஸங்கி3க்கும். ப்ரத2மப்ரபத்திக்கு க்ஷாமணம் பண்ணுகிறவர்களுக்கு புந: ப்ரபத3நம் வேண்டாவென்றது ஸ்வபக்ஷமொழிய பரபக்ஷ-மானபடி எங்ஙனே? தான் ஸ்வதந்த்ரனாய் ஈஶ்வரனை வஶீகரித்தால், ஸ்வாதந்த்ர்யமாகிற ஆத்மாபஹாரம் வருமென்று அது வாராமைக்காக 'அவனோட்டை அவிவாத3மே போரும்; உனக்குமவனுக்குமுண்டான ஸ்வாபா4விகஸம்ப3ந்-த4த்தை எப்போதும் நினை'யென்று சொல்லுகிற "யோந்யதா2 ஸந்தம்", "யமோ வைவஸ்வதோ ராஜா" "ஆத்மதா3ஸ்யம் ஹரே: ஸ்வாம்யம்" இத்யாதி3ப்ரமாணங்-களுக்கு விருத்3த4மான தாத்பர்யகல்பநம் ஆசார்யானுஷ்-டா2நஸம்ப்ரதா3யங்களுக்கு விருத்3த4மாம். "ஸக்ருதே3வ ப்ரபந்நாய", "ஸக்ருதே3வ ஹி ஶாஸ்த்ரார்த்த2:", "ஸக்ருத்-க்ருதோஞ்ஜலி:" இத்யாதி3ப்ரமாணானுகு3ணமாக, "ப்ராயஶ்சித்தி-

ரியம் ஸாத்ர யத்புந: ஶரணம் வ்ரஜேத்" என்கிற விதுக்கு
தாத்பர்யம் கொள்ளாதே புந:ப்ரபத$_3$நமாமென்கையும்,
ஶிஷ்டாநுஷ்ட$_2$ாநஸம்ப்ரதா$_3$யவிருத்$_3$த$_4$ம். ஆநுகூல்ய-
ஸங்கல்பாதி$_3$களையும் அங்க$_3$மென்கையும் ஸம்ப$_3$ாவித-
ஸ்வப$_4$ாவங்களென்கிறத்தை ப்ரபத்த்யுத்தரகாலம் அநுவர்த்தி-
யாதொழியிலும் ப$_2$லம் குறைவற்றிருக்குமென்கையும்,
அங்க$_3$பஞ்சகஸம்பந்நமான ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகிற-
தென்று த்$_3$வயத்தில் திரண்ட பொருள் என்கையும், 'இங்ங-
னல்லாதபோது ப$_4$க்திப்ரபத்திரூபோபாயங்களை விதி$_4$க்கிற
ஶாஸ்த்ரங்களெல்லாம் அத்யந்தவ்யாகுலங்களாம்' என்கை-
யும் "அஹமஸ்ம்யபராத$_4$நாமாலயோகிஞ்சநோऽக$_3$தி:।
த்வமேவோபாயபூ$_4$தோ மே ப$_4$வேதி ப்ரார்த்த$_2$நாமதி:॥
ஶரணாக$_3$திரித்யுக்தா ஸா தே$_3$வேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்"
என்கிற லக்ஷணவாக்யவிருத்$_3$த$_4$ம். அவத$_4$ாரணத்தாலே,
அவனையொழிந்ததொன்றுக்கும் உபாயத்வமில்லையென்று
கழிக்கையாலே, அங்க$_3$த்வம் சொல்லுகிற வசநங்களுக்கும்
ஸம்ப$_4$ாவிதஸ்வப$_4$ாவ(த்வ)த்திலே தாத்பர்யமாககக்கடவது.
ஸகலாத்மாக்களுக்கும் அநந்யஶரணத்வப்ரதிபாத$_3$கமான
நமஸ்ஸூதானே, 'உபாஸநாதி$_3$கள் அநந்யஶரணத்வத்துக்கு
விருத்$_3$த$_4$ங்கள்' என்கைக்கும் ப்ரமாணமாயிருக்க, ப்ரமாண-
மில்லையென்றும், அத்தை ஸ்துதியென்றும், அதிவாத$_3$மென்றும்,
அவற்றுக்கு ஸ்வரூபவிரோத$_4$ம் சொல்லவொண்ணாது
என்றும், "த்$_3$வ்யக்ஷரஸ்து ப$_4$வேத் ம்ருத்யு: த்ர்யக்ஷரம்
ப்$_3$ரஹ்மண: பத$_3$ம் । மமேதி த்$_3$வ்யக்ஷரோ ம்ருத்யு: ந மமேதி
ச ஶாஶ்வதம்" என்கிறபடியே அநந்யார்ஹஶேஷத்வாநந்யஶரண-
த்வாநந்யபோ$_4$க்$_3$யத்வஸ்வரூபநாஶகத்வமுண்டாயிருக்க,
அவற்றுக்கு ஸ்வரூபவிரோத$_4$ப்ரஸங்க$_3$மில்லையென்றும்,
"ஏகாந்தீ து விநிஶ்சித்ய தே$_3$வதாவிஷயாந்தரை:। ப$_4$க்த்யு-
பாயம் ஸமம் க்ருஷ்ணப்ராப்தௌ க்ருஷ்ணைகஸாத$_4$ந:"
என்றும், "தே$_3$வதாந்தரஶப்$_3$தா$_3$ாதி$_3$ப$_4$க்திக்ருஷ்ணைக்$_2$ய-
ஹேதுஷு । ஸாம்யக்ருத் பரமைகாந்தீ ஹரௌ ஸ்வாமீதி
பு$_3$த்$_3$தி$_4$மாந்" என்றும் வஶீகரணோபாயமென்று ப$_4$க்திகளை
தே$_3$வதாந்தரவிஷயங்களோடொக்க ஸ்வரூபநாஶகங்களாக
ஶாஸ்த்ரம் சொல்லாநிற்க, ஒருபடியாலும் ஸ்வரூபவிரோத$_4$-

ப்ரஸங்க3மில்லை என்றும், அஹங்காரக3ர்ப்ப4மென்று ஆரோபித்தார்களென்றும், "அத2 பாதகபீ4தஸ்த்வம்" என்கிற இடத்தில் 'பாதக'ஶப்3த3த்தாலே உபாஸநாதி3களை நினைக்கிற-தென்கைக்கும் த4ர்மபுத்ரனுக்கும் த4ர்மாநுஷ்ட2ாநம் ஒழிய வேறு பாதகமில்லாமையே உபபந்நமாயிருக்க, அநுபபந்ந-மென்றும், "ஸர்வே பாப்மாநோதோ நிவர்த்தந்தே", "ஸர்வே பாப்மாநः ப்ரதூ3யந்தே", "ஸர்வபாபேப்4யோ மோக்ஷயிஷ்யாமி" என்று ஶ்ருதிஸ்ம்ருதிகள் புண்யத்தையும் 'பாப'ஶப்3த3த்-தாலே சொல்லாநிற்க, அப்படிச்சொல்லவுமில்லையென்றும், இவற்றுக்கு அநந்யஶரணத்வஸ்வரூபவிரோதி3த்வம் ஸர்வாத்ம-ஸாத4ாரணமாயிருக்க, அத்தைச்சிலரிடத்திலேயொதுக்கி அவர்களதி4காரத்துக்கு விருத்3த4மென்றும் ப்ரமாணவிருத்3த4ார்த்-த2ங்களைச் சொல்லுகை அதிஸாஹஸம். லலிதாசரிதே "அஸங்கல்பிதமப்யஸ்ய ப்ரேரணம் யத் க்ருதம் மயா । விஷ்ணவாயதநதீ3பஸ்ய தஸ்யைதத் பு4ஜ்யதே ப2லம் ॥ ததோஜாதிஸ்ம்ருதி: ஜந்ம மாநுஷ்யம் ஶோப4நம் வபு: । வஶ்ய: பதிர்மே ஸர்வாஸாம் கிம்புந: தீ3பதா3யிநாம் ॥" இத்யாதி3.

ஸௌரதோபாக்2யாநே – "ஶ்ருணு தஸ்ய மஹாப்ராஜ்ஞே ! நிமித்தம் க3த3தோ மம । யேந த்வம் ப்3ராஹ்மணஸ்யாஸ்ய குலே ஜாதா மஹாத்மந:" என்று தொடங்கி இஜ்ஜந்மஹேது புறத்திண்ணையிலே வைஷ்ணவன் வந்து இருந்தானென்று சொல்லிற்று. கா3ருடே3 ஸ்ரீரங்க3மாஹாத்ம்யே – "ப4த்3ரே த்வயா ஸுஷ்டு2 க்ருதம் ந கிஞ்சித்3ஹ வித்3யதே । இதோ த்3வாத3ஶஜந்மாந்தே த்வாம் கஶ்சித் ஸித்3த4 ஆவிஶத் ॥ விஷ்ணுப4க்தோ நிவாஸார்த்த2ம் ராத்ர்யாம் து தவ வேஶ்மநி । தத்ஸந்நித4ாநப்ரப4வ: தவ ஸாது4ஸமாக3ம:। ஸா ஹி வை ப்3ரஹ்மவிது3ஷீ ஸ்ரீமத்3ரங்க3முபாஶ்ரிதா । தத்ர தீர்த்தே2ாத3கம் ஸ்ரீமத3ஶ்வத்த2ம் நாம ஸம்ஶ்ரிதா । த4ர்ம-ஜ்ஞாத4ர்மபரமா யஸ்யாஸ்தே ஸங்க3மோப4வத்" இத்யாதி3. "நிர்ஹேதுககடாக்ஷேண மதீ3யேந மஹாமதே । ஆசார்ய-விஷயீகாராத் ப்ராப்நுவந்தி பராம் க3திம் ॥ சித:பரம-சில்லாபே4 ப்ரபத்திரபி நோபதி4: । விபர்யயே து நைவாஸ்ய

ப்ரதிஷேத₄ாய பாதகம்", "நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி, அவனதூரரங்கமென்னுது அயர்த்து வீழ்ந்தளிய மாந்தர் கவலையுட்படுகின்றாரென்றதனுக்கே கவல்கின்றேனே", (அருளினன்)(தி.வா.மொ.1.1.1) நிர்ஹேதுகமாக அருளிக்கொண்டு நிற்கக்கண்டவித்தலை. எனக்கு அருளினன் என்றுதொழிந்தது - ப₄க₃வத்₃விஷயீகாரத்துக்கு முன்பு தம்மை அஸத்கல்பராக நினைத்திருக்கையாலே. (அருளினன்) இத்தலை அர்த்தி₂க்கவன்றிக்கே முலைக்கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப்போலே அருளிக்கொண்டு நிற்கக்கண்டவித்தலை. "த₄ாது: ப்ரஸாத₃ாத் மஹிமாநமீஶம்" என்கிற படியே நிர்ஹேதுகமாக அருளிக்கொண்டு நிற்கக்கண்டவித்தலை என்றும், '(உடையானிடை) (1-2-1) அவனுடையவனுய் உங்கள் ஸத்தையை நோக்கிக்கொண்டு போராநிற்க, நீங்களும், 'நான், என்னது' என்று அகலப்பாராதே உங்களை அவன் பக்கலிலே ஸமர்ப்பிக்கப்பாருங்கோள். அவன் உடையவனுன பின்பு அவனோடு அவிவாத₃மே உங்களுக்கு வேண்டுவது' என்றும், "தேந சேத₃விவாத₃ஸ்தே" - உடையவனுயிருக்கிறவனோடே உனக்கு அவிவாத₃ம் உண்டாகில், இத்தால் பேறு என் என்பாயோ? "மா க₃ங்க₃ாம் மா குருந் க₃ம:" - ஒரு தீர்த்த₂ம் தேடிப்போதல், புண்யக்ஷேத்ரம் தேடிப்போதல் செய்ய வேண்டா. அஹங்காரமமகாரங்கள் கிடக்க ப்ராயஶ்சித்தம் பண்ணுகையாவது - நிஷித்₃த₄த்₃ரவ்யத்தை உள்ளே வைத்து மெழுகூட்டினவோபாதியிறே. உடையவனுக்கும் உடைமைக்கும் தக்கபடியிறே ப்ராயஶ்சித்தமும். உடையவன் ஸர்வேஶ்வரன், த்₃ரவ்யங்களில் ப்ரத₄ாநத்₃ரவ்யமான ஆத்மத்₃ரவ்யத்தையிறே அபஹரித்தது. அபஹரித்த த்₃ரவ்யத்தைப் பொகட்டு ப்ராயஶ்சித்தம் பண்ணவேணுமே. பொகடுகிற த்₃ரவ்யம் தானுகையாலே ப்ராயஶ்சித்தம் பண்ணுகைக்கு வேறு அதி₄காரமுமில்லையே. ஆகையால் நீங்களும் உடையவன் பக்கலிலே வீடு செய்மினோ. வீடு - ஸமர்ப்பிக்கை. அதாகிறது - இசைகை' என்றும் '(வெறிதே அருள்செய்வர்) நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணுவர், ஆருக்கென்னில்-

(செய்வார்கட்கு) "யமேவைஷ வ்ருணுதே" என்று தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு. தாந்தாம் ஒன்று செய்வார்க்கென்னில், 'வெறிதே' என்னக்கூடாதிறே. ஆனாலுமொரு ஹேது வேண்டாவோ அருளுக்கென்னில், உகப்பாயிற்று ஹேது. "ப்ரியதம ஏவ ஹி வரணீயோ ப$_4$வதி" என்னக்கடவதிறே. ருசியுண்டானாலும் இவன் சேதநனான வாசிக்கு சைதந்யப்ரயுக்தமான ஸ்வப$_4$ாவமாகக் கொள்ளுமித்தனையல்லது பேற்றுக்கு ஸாத$_4$நமாகச் சொல்லவொண்ணாதிறே' என்றும், ' 'மதி: அநுமதி:' என்றாக்கி அநுமதிமாத்ரத்தாலே' என்பர் ப$_4$ட்டர். அதாவது 'அவன் புகுகிறவிடத்தில் விலக்கிற்றிலன் என்கை' என்றும், '(வைத்தேன் மதியாலெனதுள்ளத்தகத்தே) – அநுமதியாலே என் நெஞ்சினுள்ளே வைத்தேன். ஓர் அநுமதிமாத்ரத்துக்கு இத்தனை ப$_2$லமுண்டாவதே. (எய்த்தே ஒழிவேனல்லேன்) – இனிப்பிறந்து க்லேஶிக்கக் கடவேனல்லேன்' என்றும், முதற்பாட்டில் யாத்$_3$ருச்சி$_2$கமாகக் திருமலையைச் சொல்லுங்காட்டில் நிரபேக்ஷனான தான் பிராட்டியோடே கூட வந்து என்னுள்ளே புகுந்தருளினானென்கிறார். (திருமாலிருஞ்சோலைமலை இத்யாதி$_3$) முன்பு அநாதி$_3$காலம் ஈஶ்வரனுக்குத்தம் பக்கல் பேரிட்டுக் கொள்ளவாவதின்றிக்கேயிருக்க, இப்போது அவனுக்குப் பேரிட்டுக்கொள்ளுகைக்கடியானது இன்னதென்கிறார். ஓரோ தே$_3$ஶங்களில் மலைகளைச்சொல்லாநின்றால் ஓரோ விஶேஷங்களையிட்டுச் சொல்லக் கடவதாயிருக்குமிறே. அப்படியே திருமாலிருஞ்சோலைமலை என்றேன். (என்ன) மநஸ்ஸஹகாரமுமில்லைகிடீர், உக்திமாத்ரமே என் பக்கலுள்ளது. 'இவன் ஶேஷபூ$_4$தனாயிருந்தானாகில், உபாயப$_4$ாவம் நம்பக்கலிலேயாயிருந்ததாகில், இவனுடைய பேறு நம் பேறாயிருந்ததாகில், சேதநனான வாசிக்கு உக்திமாத்ரமுண்டாய்த்தாகில், இதுக்கவ்வருகு கொண்டு கார்யமென்?' என்றிருக்குமவனிறே. இதுதான் ஒரு மலையிறே அவனுக்கு. உக்தியை இல்லையென்னவொண்ணாதே. இதுக்கடி ஆராயுமவனல்லனே. ராவணன் தம்பிக்கு மித்ரப$_4$ாவமேயமையும் என்னுமவன் இதுக்கு அவ்வருகொன்று வேணுமென்றிரானிறே. மலைகளினுடைய

ஸாமாந்யம் கிடக்க, இவ்விஶேஷத்தைச் சொல்லிற்று – இதிலுண்டான ஆத3ராதிஶயமன்றோ என்றிராநின்றானாய்த்து அவன். ஆக இவர்க்கொன்றில்லை என்னவுமாய், அவனுக்கு இதொன்றுண்டென்னவுமாம்படியிருக்கிற-திறே இதுதானே. (திருமால்) அஹ்ருத3யமாகச் சொன்னது தன்னை ஸஹ்ருத3யமாக்கிக் கொடுப்பாருமருகேயுண்டு என்கிறார். (வந்து) 'அவன் வருவதே' என்றிவர் விஸ்மயப்படா நிற்க, 'பிபாஸை வர்த்தி4த்தவன் தண்ணீரிருந்தவிடத்தே வருமத்தனையன்றோ' என்றாய்த்து அவன் வார்த்தை. க்ருபணராயிருப்பார் ஶ்லாக்4யரிருந்தவிடத்தே வரு-மித்தனையன்றோ என்றிராநின்றான். எவ்வார்க்கு அதி4க3ம்ய-னானவனுக்கு நான் அபி4க3ம்யனானேன். "ஸோப்4யக3ச்ச2த் ஶப3ரீம்" என்னுமாபோலே. (என்னெஞ்சம்) அந்த உக்தி ஸஹக்ருதமான என்னெஞ்சிலே (நிறையப் புகுந்தான்) விஷயாந்தரங்களுக்கு அவகாஶமில்லாதபடி புகுந்தான். அத்ரிப4க3வானாஶ்ரமத்திலே, 'நான் ராமன், இவள் மைதி2லி, இவன் லக்ஷ்மணன்' என்று நமஸ்கரித்து நின்றாப்போலே, அக்காட்டில் பாழடையத்திரும்படி புக்காப்போலே என்னெஞ்சில் பாழ் தீரப்புகுந்தான்' என்றும், (இன்றென்னைப் பொருளாக்கி) அஸத்கல்பனான என்னை இன்று ஒரு வஸ்து-வாம்படி பண்ணி. 'பொருளல்லாத வென்னை' என்றாரிறே. (தன்னை) ஸத்துக்களுக்கு(ம்) {அஸத்துக்களுக்கும் – என்று லிகி2தபுஸ்தகபாட2ம்} ஸ்ப்ருஹணீயனான தன்னை. (என்னுள் வைத்தான்) தன்னைப்பிறர்க்கு அவகாஶமில்லாதபடி முற்றூட்டாக என்னுள்ளே கொடுவந்துவைத்தான். (அன்று) அவன் விஶேஷகடாக்ஷம் பெறுவதற்கு முன்புள்ள நாளை-யெல்லாவற்றையும் சொல்லுகிறார். இன்றென்கிறது – மயர்வறமதிநலம் அருளப்பெற்றவதுக்குப் பின்புண்டான காலத்தை. (என்னைப்புறம் போகப்புணர்த்ததென் செய்வான்) பரதந்த்ரனான என்னைப் புறம்பு போகப் பண்ணிற்று, என் செய்கைக்காக? பா3ஹ்யனாகப்பண்ணுகையாகிறது– உபே-க்ஷிக்கை. 'இழந்த நாளிழந்ததுமவனாலே, பெற்றவின்று பெற்றதுமவனாலே' என்றிருக்கிறார். பரதந்த்ரவஸ்து செல்ல நிற்கவற்றோ, வரநிற்கவற்றோ. (குன்றித்யாதி3) இப்படி

மதிப்பனுணவன் மலேகளேச் சேரவைத்தாப்போலே விளங்கா-நின்றுள்ள மாடங்கள் சூழ்ந்த திருப்பேரான். (ஒன்றெனக்கு அருள் செய்ய) முன்பு கைவிட்டதுக்கு ஹேது சொல்லவு-மாம், இன்று என்னே விஷயீகரித்ததுக்கு ஹேது சொல்லவு-மாம். (உணர்த்தலுற்றேனே) இதுக்கு ஒரு மறுமாற்றம் அருளிச்செய்ய வேணுமென்று திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பம் செய்ய வேண்டியிராநின்றேன். 'இதுநாம் சொல்லவேணுமோ? நீரே அறியீரோ' என்ருன். 'அடியேன் அறியேன், ஸர்வஜ்ஞரான தேவர் அருளிச் செய்யவேணும்' என்ருர். 'ஆனால் நாம் உம்முடைய நெஞ்சிலே புக்கிருக்-கிறஇடத்தில் ஸம்வதித்திருந்தீர். அத்தாலேகாணும்' என்ருன், 'ஓம், அது தானுண்டோ, யாஞெட்டி என்னுள் இருத்துவம்' என்ருர். 'அதில்லேயாகிலும் புகுந்த பின்பு நம்மை ஆதரித்தீரே' என்ருன். '*மருவித்தொழும் மனமே தந்தாய்* என்று அதுவும் தேவர் செய்த வித்தனே'என்ருர். 'ஓங்காணும், அதில்லேயாகிலும் நம்மோடொக்க விஷயாந்தரங்களேயும் விரும்பாதேயிருந்தீரே' என்ருன். '*என்னேத் தீமனங்கெடுத்தாய்* என்று அதுவும் தேவரே-யன்றே' என்ருர். 'இவையொன்றுமில்லேயாகிலும் நாம் தந்த மதிநலத்தை வளர்த்துக்கொண்டு போந்தீரே' என்ருன். '*காதல்கடல் புரையவிளேவித்த காரமர் மேனி* என்று அதுவும் தேவரீரேயன்றே' என்ருர். இப்படியிவர் முடியத்-துடர்ந்தவாறே பெருங்கடல் மண்டினுரைப்போலே போக்கற்ருன். 'இதுக்கு ஈஶ்வரன் சொன்ன உத்தரமென்?' என்று ஜீயர் பட்டரைக்கேட்க, 'இவர் தலேயிலே ஒரு பழியையேறிட்டு நெடுநாளிழந்த நாம் சொல்வதென்' என்று லஜ்ஜாவிஷ்டனுய்க் காலாலேதரையைக்கீறி நிற்கு-மித்தனேபோக்கி வேறுத்தரமுண்டோ' என்று அருளிச்செய்தார். அதாவது- 'முன்பு ருசியில்லாமையாலே' என்னமாட்டான், 'இப்போது ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகையாலே' என்ன மாட்டான். ஆனல் பின்னே ஈஶ்வரனுக்கு வைஷம்யநைர்-க்ருண்யாதிகள் வருதல், ஸர்வமுக்திப்ரஸங்கம் வருதல் செய்யாதோவென்னில், அது செய்யாது. அடியிலே அத்வேஷ-மும், இச்சையும் பிறக்கைக்குத் தான் க்ருஷிபண்ணி, அது

பக்வமாமளவும் பார்த்திருக்கையாலே; அவன் கேட்டதுக்கு ஒரு மறுமாற்றம் சொல்லக்காணாமையாலே, 'அறிந்தோம் இதுக்கு ஹேது – இங்ஙனேயாகவேணும்' என்று பார்த்தார். 'தன்னுடைய ஸ்பர்ஶம் ப்ரதிகூலமாகை தவிர்ந்து விலக்காத ஸமயம் பார்த்திருந்தானாதல், தன்னையொழிந்தவற்றில் ஸாத₄நபு₃த்₃தி₄ தவிருமளவும் பார்த்திருந்தானாதலாக-வடுக்குமென்று பார்த்தார். ஆனாலிதுதன்னை அவன் உத்தர-மாக அருளிச்செய்யாதொழிவானென்னென்னில், 'சைதந்ய-ப்ரயுக்தமாய் வருகிற அத்₃வேஷத்தை ஸாத₄நமென்ன மாட்டானே, உபாயப₄ாவம் தன்தலையிலேயாய்த்தே, நெடு நாள் இவர்தலையிலே பழியிட்டிழந்திருந்த நாம் எத்தைச் சொல்லுவது' என்று பேசாதே இருந்தான். '*ஹ்ரீரேஷாஹி மமாதுலா* என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜித்து நிற்குமவ-னிறே. இவர்தாமெடுத்துவைத்து வார்த்தை சொல்லும் படியாய்த்து அவன் நிலை. சைதந்யப்ரயுக்தமான ருசிதான் ஸ்வரூபாதிரேகியன்றிறே' என்றும், *சார்வேதவநெறிக் கு ஒன்பதாம் பாட்டிலே *ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு* என்கிற படியே அநேககால ஸாத்₄யமான ப₄க்தியாலே லபி₄க்கப்-படுமவனை, கேவலம் அவன்ப்ரஸாத₃த்தாலே காணப்பெற்றேன் என்கிறார். *கண்டேன் கமலமலர்ப்பாதம் காண்டலுமே விண்டே-யொழிந்த* என்றும், '(அவனதருளால்) அவனுடைய ப்ரஸாத₃த்தாலே . ப்ராப்யமவனே என்கிற நிப₃ந்த₄நத்தோ-பாதி ப்ராபகமுமவன் ப்ரஸாத₃மேயாயிருக்கிறபடி.(உறல் பொருட்டு) ப்ராபிக்கையின் பொருட்டு, ப்ராப்யப்ராபகமவனே-யாகில், நீர் இதில் அந்வயித்த அம்ஶமேதென்ன, (என்னுணர்வி-னுள்ளேயிருத்தினேன்) அவனை என்னுடைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். *வைத்தேன் மதியால்* என்றது தானிறே. இச்சி₂த்தேனென்கை. இச்சை₂தான் ஸ்வாதீ₄நமோ-வென்னில், (அதுவும் அவனதின்னருளே) அந்த இச்சை₂ தான் பிறந்தது அவன் ப்ரஸாத₃த்தாலே' என்றும் ஈட்டில் பிள்ளையருளிச்செய்தருளினார். *ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்* என்றும், *களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்* என்றும், *நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்நமக்கென்று

நாவிடாறுமேகசிந்தையனாய்* என்றும், *அடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்றும், கழல்களவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன் அருளிச்செய்தார்.

*தஸ்ய ச வஶீகரணம் தச்ச2ரணாக3திரேவ* என்று ஶ்ரீப4ாஷ்ய-காரர் அருளிச்செய்தது-அவ்விடத்தில் ஶ்ருதப்ரகாஶிகையில் 'கத2ம் ஸர்வஸ்மாத்பரஸ்ய அநீஶ்வரேண ஸம்ஸாரிணா வஶீகர்த்தும் ஶக்யத்வம், ஶக்யஶ்சே(ஞ்சே)த் தத்ப்ரகாரோऽபி க்வசித் ஶ்ரூயேத । ந ச ஶ்ரூயதே। *யச்சே2த் வாங்மநஸீ ப்ராஜ்ஞ:* இத்யாதௌ3 தஸ்ய வஶீகார்யத்வஶ்ரவணம் த3ர்ஶ-யிஷ்யதே । இத்யுக்தவஶீகரணப்ரகாரப்ரதிபாத3க*தத்3யச்-சே2த் ஶாந்த ஆத்மநி* இதிஶ்ருதிவ்யாக்2யாநே *தத்3யச்சே2த் ஶாந்த ஆத்மநீ*தி ஶாந்தே: ஸ்வத ஊர்மிஷட்கப்ரதிப4டே மஹத ஆத்மநோ ஜீவஸ்ய நியமநம் நாம தத்சே2ஷதா-ப்ரதிபத்தி:। ஸைவ தஸ்யாபி வஶீகரணம் ப4வதி' என்று ப4ட்டராலே அதி4காரிவிஶேஷணமான ஶேஷத்வஜ்ஞாந-கார்யமாக வ்யாக்2யாதமாய்த்திறே. *ரசநாநுபபத்தே:* இத்யாத்3யதி4கரணத்திலே, *வ்யதிரேகோऽநவஸ்தி2தே:* என்கிற ஸூத்ரப4ாஷ்யத்திலே 'ஸ்வஶாஸநாதிவ்ருத்தி-வ்யவஸாயநிவ்ருத்திமாத்ரேண அநாத்3யநந்தகல்பேஷு பாபசித-து3ர்விஷஹாநந்தாபராத4ாநங்கீ3காரேண நிரதிஶயஸுக2-ஸம்வ்ருத்3த4யே ஸ்வயமேவ ப்ரயததே । யதோ2க்தம் -*தேஷாம் ஸததயுக்தாநாம் ப4ஜதாம் ப்ரீதிபூர்வகம் । த3தா3மி பு3த்3தி4-யோக3ம் தம் யேந மாம் உபயாந்தி தே*, *தேஷாமேவாநு-கம்பார்த்த2ம் அஹமஜ்ஞாநஜம் தம:। நாஶயாம்யாத்மப4ாவ-ஸ்த2: ஜ்ஞாநதீ3பேந ப4ாஸ்வதா* இதி' என்று ப4க3வத3ாஜ்ஞா-திலங்க4நபு3த்3தி4நிவ்ருத்திஸ்த2ாநத்திலே ப்ரீதிபூர்வகப4ஜநத்-தையும் ப4ாஷ்யகாரர் அருளிச்செய்தார். 'வாக்யாந்வயாத்' இத்யத்ர ச 'அதோத்ர பரமாத்மைவ அம்ருதத்வோபாயதயா த்3ரஷ்டவ்ய:' இத்யாதி3நா உச்யதே' என்று ப4க3வானே உபாயமென்று ப4ாஷ்யகாரர் முக்தகண்ட2மாக அருளிச்-செய்தார். *பரமதஸ்ஸேதூந்மாந* இத்யாத்3யதி4கரணத்தில்-*உபபத்தேஶ்ச* என்கிற ஸூத்ரப4ாஷ்யத்திலே-'ப்ராப்யஸ்ய பரமபுருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வோப-

பத்தே: । "நாயமாத்மா ப்ரவசநேந லப்$_4$ய: ந மேத$_4$யா ந
ப$_3$ஹுநா ஶ்ருதேந । யமேவைஷ வ்ருணுதே தேந லப்$_4$ய:
தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" இத்யநந்யோ-
பாயத்வஶ்ரவணாத்' என்றும், ஶ்ருதப்ரகாசிகையிலே
'அநந்யோபாயத்வஶ்ரவணாத் - ப்ராப்யஸ்யைவ உபாயத்வ-
ஶ்ரவணாதி$_3$த்யர்த்த$_2$: "விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" இதி
அநேந ப்ராபகத்வம் ப்ராப்யத்வம் ச க$_3$ம்யதே' என்றும்,
"ப$_2$லமத உபபத்தே:" என்கிறவிடத்தில், 'உபாஸீநாநாம்
பரஸ்மாதே$_3$வாஸ்மாத் புருஷாத்தத்ப்ராப்திரூபம் அபவர்க்-
க$_3$ாக்$_2$யம் ப$_2$லமிதி ஸம்ப்ரதி ப்$_3$ரூதே' என்றும், 'உபபத்தே:
ஸ ஏவ ஹி ஸர்வஜ்ஞ: ஸர்வஶக்தி: மஹோத$_3$ார: யாக$_3$த$_3$ாந-
ஹோமாதி$_3$பி$_4$: உபாஸநேந ச ஆராதி$_4$த: ஐஹிகாமுஷ்மிக-
பே$_4$ாக$_3$ஜாதம் ஸ்வஸ்வரூப$_4$ாவாப்திரூபமபவர்க்க$_3$ம் ச
த$_3$ாதுமீஷ்டே । நஹ்யசேதநம் கர்ம க்ஷணத்$_4$வம்ஸி
காலாந்தரப$_4$ாவிப$_2$லஸாத$_4$நம் ப$_4$விதுமர்ஹதி' என்றும்,
"ஶ்ருதத்வாச்ச" என்கிற ஸூத்ரப$_4$ாஷ்யத்திலே '"ஸ வா ஏஷ
மஹாநஜ ஆத்மா அந்நாதோ$_3$ வஸுத$_3$ாந: ஏஷ ஹ்யேவ
ஆநந்த$_3$யாதி " இதி பே$_4$ாக$_3$ாபவர்க்க$_3$ரூபம் ப$_2$லம்
அயமேவ த$_3$த$_3$ாதீதி ஹி ஶ்ரூயதே' என்றும், 'ஸித்$_3$த$_4$த$_4$ர்மமே
மோக்ஷஸாத$_4$நம், ஸாத்$_4$யத$_4$ர்மம் தத்ஸமாராதநம்' என்றும்
ப்ரகாஶிப்பிக்கப்பட்டது. அருளாளப்பெருமாளெம்பெருமா-
னார் - ப்ரமேயஸாரத்திலே - "கருமத்தால் ஞானத்தால்
காணும் வகையுண்டே" என்று தொடங்கி நாலு பாட்டாலே
நமஶ்ஶப்$_3$த$_3$ார்த்த$_2$மான அநந்யஶரணத்வத்தை அருளிச்-
செய்கிறார். (நமஸ்ஸூக்கர்த்த$_2$ம் - அநந்யஶரணத்வமிறே).
'நாலாம்பாட்டு - ஶேஷியானவன் திருவடிகளை, அத்திருவடி-
கள்தானே தருகையொழிய உபாயாந்தரங்களால் காண
விரகுண்டோ? என்கிறார்' என்றும், 'அஞ்சாம் பாட்டு -
ஸித்$_3$தோ$_4$பாயத்தின் படியைக்கண்டால் உபாயாந்தரங்களை
ஸவாஸநமாக விட்டு, அதுதன்னிலும் தன்னுடைய ஸ்வீகா-
ரத்தில் உபாயபு$_3$த்$_3$தி$_4$யற்றுத்தன் வெறுமையை அநுஸந்-
தி$_4$த்திருக்குமது - ஸர்வேஶ்வரனுடைய க்ருபாப$_2$ல-
மென்கிறார்' என்றும்,'ஏழாம் பாட்டு- 'குறையேதுமில்லா-
தார்க்கென்றுமிறையேதுமில்லாதயாம்' என்று அருளிச்செய்த

ப்ரஸங்க3த்திலே - இப்படியிரண்டு தலைக்கும் உள்ள இல்லா-மையை அநுஸந்தி4த்து ஶேஷியானவனை ஜயித்திருப்பாரில்லை. அதொருவருக்கு ஸித்3தி4க்குமதோ? என்கிறார்' என்றும் தத்3வ்யாக்2யாநத்திலே ஜீயர் அருளிச்செய்தருளினார்.

"தன்னால்வரும் நன்மை விலைப்பால் போலே, அவனால் வரும் நன்மை முலைப்பால்போலே" என்று ஸ்வக3த-ஸ்வீகாரத்தினுடைய ஹேயதையையும், பரக3தஸ்வீகாரத்தி-னுடைய ஶ்லாக்4யதையையும், பரமரஹஸ்யத்திலே ராத்ரி ப4ர்த்தாவோடு ஸம்ஶ்லேஷித்து விடிந்தவாறே கூலிதர வேணுமென்னுமாபோலே ப4க்தியை உபாயமாக்கிக்கொள்-ளுகை. உபயவிஷயத்தில் எம்பெருமானாலே எம்பெருமானைப் பெறுமித்தனைபோக்கி, தந்தாம் நன்மை கொண்டு பெற நினையார் ஸ்வரூபஜ்ஞாநமுடையார்' என்றும் திருக்குருகைப் பிரான் பிள்ளான் அருளிச்செய்தார்.

ப4ட்டர் - ரஹஸ்யத்ரயவிவரணமான அஷ்டஶ்லோகியில்-"கர்த்தும் த்யக்துமபி ப்ரபத்துமநலம்" என்று ப்ரபத்தி பண்ணுகைக்கும் யோக்3யதையில்லாமையை அருளிச்-செய்தார் (எம்பெருமான்படியையநுஸந்தி4த்து).

க3த்3யவ்யாக்2யாநத்திலே 'அநந்தரம் - கீழ் ஶரணம்புக்க அதுக்கு க்ஷாமணம் பண்ணுகிறார். க்ஷாமணம் பண்ணுகிறது-ஆருடைய ஹ்ருத3யத்தாலேயென்னில், ஸ்வஹ்ருத3யத்-தாலே. அதென்னென்னில், அநாதி3காலம் அபராத4த்தைப் பண்ணிக்கூடு பூரித்தவன் இன்றாக ஆபி4முக்2யம் பண்ணினானேயாகிலும், "ரிபூணமபி வத்ஸல:", "யதி3 வா ராவண: ஸ்வயம்" என்றிருக்குமீஶ்வரனுடைய படியைப் பார்த்தால் கைக்கொள்ளுகைக்கு ஒருகுறையுமில்லை. பதிவ்ரதையானவள் நெடுநாள் வ்யபி4சரித்து, பின்பு ப4ர்த்தா-வானவன் பழியா{ள}னென்கிறவிதுவே ஆலம்ப3நமாக வந்தென்னை ரக்ஷிக்கவேணுமென்று முன்னே நின்றால், வருகைதானே அபராத4ம், அதுக்குமேலே என்னை ரக்ஷிக்க வேணுமென்கையாவது அபராத4த்துக்கு மேலெல்லையாய்

ஸ்த்ரீத்வஹாநியுமாயிருக்குமிறே. அப்படியே இவனும் அநந்யார்ஹஶேஷபூ4தனுமாயிருந்துவைத்து, கனக்க அபராத4த்தைப்பண்ணிப்போந்து இன்று வந்து ஶரணம் புகுருகையாவது அபராத4த்துக்கு மேலெல்லையுமாய், ஶேஷத்வ-ஹாநியுமாயிருக்கக்கடவதிறே. ஆனால், ஶரணம்புகுருகை அபராத4மானால், அது பண்ணுவானென்னென்னில், *தமேவ ஶரணம் க3த:* என்று புறம்பு புகலில்லாமையாலே ஶரணம்புகவும் வேணும், பூர்வவ்ருத்தத்தைப்பாரா பண்ணின இதுவும் அபராத4மென்று ப4யஹேதுவாகை-யாலே க்ஷாமணம் பண்ணவும் வேணும்' என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தார். 'உபாயத்தில் அஹங்காரமாவது – ஸ்வக்3தஸ்வீகாரத்தில் உபாயபு3த்3தி4யை த்யஜித்து பரக3த-ஸ்வீகாரத்துக்கு விஷயபூ4தனாகை' என்று இவர்தாமே (வார்த்தாமாலையில்) அருளிச்செய்தார்.

'ஸ்வாநுவ்ருத்திப்ரஸந்நாசார்யனாலே மோக்ஷமோ? க்ருபா-மாத்ரப்ரஸந்நாசார்யனாலே மோக்ஷமோ?' என்றிங்ஙனே ப்ரஸங்க3மாக, முதலியாண்டான் – 'ஸ்வாநுவ்ருத்திப்ரஸந்நா-சார்யனாலே' என்ன, ஆழ்வான், 'க்ருபாமாத்ரப்ரஸந்நா-சார்யனாலே' என்ன, ஆண்டான் – 'குற்றமின்றிக்குணம் பெருக்கிக் குருக்களுக்கு அநுகூலராய்' என்று பெரியாழ்வார் அருளிச்செய்கையாலே ஸ்வாநுவ்ருத்திப்ரஸந்நாசார்ய-னாலேயாக வேணும்,' என்ன, அவ்வளவிலே, ஆழ்வான் – 'அங்ஙனன்று, *பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப்பணிகொள்வான் குயில் நின்றார் பொழில்சூழ் குருகூர் நம்பி* என்று ஸ்ரீமதுரகவியாழ்வார் அருளிச்செய்கையாலே அவருடைய அடிப்பாட்டிலேயிருக்கிற நமக்கெல்லாருக்கும் ஸ்வாநுவ்ருத்தி கூடாமையாலே க்ருபாமாத்ரத்திலே மோக்ஷம்' என்று அருளிச்செய்தார். அன்று ஆண்டானும் 'அப்படியாகவேணும்' என்று போர ப்ரீதராய் அருளினார் என்று வார்த்தாமாலாதி3களிலே ப்ரஸித்3த4மிறே.

*இயமிஹமதிரஸ்மது3ஜ்ஜீவிநீ வரத3, தவ க2லு ப்ரஸாத3ா-

த்3ருதே ஶரணமிதி வசோபி மே நோதி3யாத்* என்றும், *ஏவம் ஸதா3 ஸகலஜந்மஸு ஸாபராத4ம் க்ஷாம்யஸ்யஹோ தத3பி4ஸந்தி4விராமமாத்ராத்* என்றும் ஆழ்வான் அருளிச்செய்தாரிறே. சரம ஶ்லோகவ்யாக்2யாநப்ரவேஶத்திலே "இதிலர்த்த2ம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர்நம்பி பக்கலில் எழுந்தருளிற்று, நம்பிதாமும் இதிலர்த்த2த்திலுடைய கௌ3ரவத்தையும், இதுக்கு அதி4காரிகளில்லாமையையும் பார்த்திறே–இவருடைய ஆஸ்திக்யாத3ரபரீக்ஷார்த்த2மாகவும் பலகால் நடந்து துவளப்பண்ணி சூளரவு கொண்டு மாஸோபவாஸம் கொண்டு அருமைப்படுத்தியருளிச்செய்தருளிற்று. நிஷ்க்ருஷ்டதத்வநிஷ்ட2னாய், பரமாத்மநி ரக்தனாய், அபரமாத்மநி வைராக்3யமுடையவனாய், ப்ரமாணபரதந்த்ரனாய், ப4க3வத்3வைப4வம் ஶ்ருதமானால் அது உபபந்நமென்னும்படியான விஸ்ரம்ப4ப3ஹுளயமுடையனாய் ஆஸ்திகாக்3ரேஸரனாயிருப்பானொருவனுண்டாகில், அவன் இந்த ஶ்லோகார்த்த2ஶ்ரவணாநுஷ்ட2ாநத்துக்கு அதி4காரியாகையாலே அதி4காரிதுர்லப4த்வத்தாலும், அர்த்த2கௌ3ரவத்தாலுமித்தைவெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள் எம்பெருமானார்க்கு முன்புள்ளார். ஸம்ஸாரிகள் து3ர்க3திகண்டு பொறுக்கமாட்டாதபடி க்ருபை புரண்டிருக்கையாலே அர்த்த2த்தின் சீர்மைபாராதே அநர்த்த2த்தையே பார்த்து வெளியிட்டருளினார் எம்பெருமானார்" என்று பெரிய ஜீயர் அருளிச்செய்தார்.

திருவிருத்தத்திலே – *ஈனச்சொல்* என்கிறபாட்டின் வ்யாக்2யாநத்திலே "(ஞானப்பிரானையல்லாலில்லை) அவனையொழிந்த தானும், பரிக்3ரஹிக்கிற உபாயங்களும் அடையக்கழுத்துக்கட்டியென்கை. ஒருவிசை திருக்கோட்டியூர் நம்பி திருநாளுக்கெழுந்தருளின ஸமயத்திலே இவ்வர்த்த2த்தை அருளிச்செய்வதாக ஒரு ஏகாந்தஸ்த2லத்திலே எழுந்தருளி எம்பெருமானாரையும்கூடக் கொண்டு புக்காராய், திருப்பணிசெய்வானொருவன் உறங்கிக் குறட்டைவிடாநிற்க, அவனைக்கண்டு "அநர்த்த2ப்

